# கணபதி

பூ. மு. முருகேச முதலியார்
எழுதியது






துரைத்தனத்தார் அங்கீகரித்தது

(19-4-'27 கெஜட் 227-ஆம் பக்கம் பார்க்க)

சென்னை :

ஸி. குமாரசாமி நாயுடு ஸன்ஸ்

1927

ரெஜிஸ்தர் செய்தது] [விலை 4 அணா

# பொருள் அடக்கம்





# முகவுரை

நமது தேசத்து நூல்களுள்ளே பக்தி வைராக்கிய ஞானங்களை விளக்கும் புராணப்பகுதி ஒரு முக்கிய பகுதியாகும். புராணங்களனைத்தும் பொய்க் கதைகளே யென்று சொல்லுவோர் அவற்றாற் பெறப்படும் நற்பயன்களை இழப்பர். புராணங்கள், தெய்வங்கள் இவ்வுலகத்து நிகழ்த்திய வீரச்செயல்களை அணிபெற எடுத்துச் சொல்லு முகத்தாற் பல நீதிகளையும் புகட்டும். ஆயினும் அவை விரிந்திருத்தலால் பலர்க்கு அவற்றைக் கற்றற் கண் ஊக்கம் உண்டாவதில்லை. நண்பர் பூ. மு. முருகேச முதலியா ரவர்கள் விநாயகபுராணம் கந்தபுராணம் பாகவதம் என்னும் மூன்று பெரும் புராணங்களுட் கூறப் படும் முக்கிய சரிதங்களைச் சுருக்கி முறையே கணபதி குமரன் கோபாலன் என்னும் மூன்று சிறு புத்தகங்களாக எழுதி உபகரித்ததனல் பாடசாலைச் சிறுவர் சிறுமியரும் பெருநூல்களைக் கற்றற்கு அவகாசமும் ஆற்றலுமில்லாத மற்றையோரும் இத் தெய்வவீரர்களைப்பற்றி எளிதில் அறிந்துகொள்ளற்கு இடமுண்டாயிற்று. அவற்றுள் ஒவ்வொன்றும் அழகிய தமிழ் நடையில் அமைந்திருப்பதோடு பொருத்தமான சித்திரப்படங்களாலும் பொலிவுறுகின்றது.

சென்னை :
30-12-1926.

S. அனவரதவிநாயகம் பிள்ளை, M.A., L.T.,
*Formerly Lecturer,*
*University College, Colombo.*



கணபதியின் திரு-அவதாரம்




திருவாக்கும் செய்கருமம் கைகூட்டும் செஞ்சொற்
பெருவாக்கும் பீடும் பெருக்கும் - உருவாக்கும்
ஆதலால் வானோரும் ஆனை முகத்தானைக்
காதலால் கூப்புவர்தம் கை.

---

## 1. தேவர்களும் அசுரர்களும்

பிரமதேவர் சகல லோகங்களையும் உண்டாக்கியபோது சுவர்க்கலோகத்தில் தேவர்களையும் பாதாள லோகத்தில் அசுரர்களையும் படைத்தார். அவர்கள் உற்பத்தி காலத்திலிருந்தே ஒருவருக்கொருவர் விரோதங்கொண்டு நெடுநாள் யுத்தம் செய்துவந்தனர். பின்னர், தேவர்கள் அசுரர்களோடு நீடித்துப் போர் புரிய முடியவில்லை. அவர்கள் சிவபெருமானைக் குறித்துத் தவம் செய்து அவரிடமிருந்து அநேக ஆயுதங்களைப்

பெற்றார்கள். அவைகளை அசுரர்கள்மேல் பிரயோகம் செய்தார்கள். அதனால் அசுரர்கள் அபஜய மடைந்து போர்க்களத்தினின்றும் ஓடி யொளித்தனர். அவர்கள் தாம் அடைந்த அபஜயத்தினால் மிகவும் மனம் வருந்தி, தங்கள் குலகுருவாகிய சுக்கிராசாரியரை வரவழைத்து, தங்கள் சத்துருக்களை ஜயிப்பதைக் குறித்து அவருடன் ஆலோசித்தனர்.

சுக்கிராசாரியர் அப்போது அசுரர்களைப் பார்த்து, 'அஞ்சவேண்டாம்' என்று தேற்றி, அதற்குத் தக்க யோசனை கூறுவதாகச் சொல்லினர். பின்னும், 'மைதல தேயத்திற்கு அரசனாய், கண்டக நகரத்தில் செங்கோல் செலுத்தி வரும் சக்கரபாணி என்னும் அரசனுக்குச் சூரியபகவானது அனுக்கிரகத்தினால் சிந்து என்னும் அரக்கன் ஒருவன் பிறக்கப் போகின்றான்; அவன் உங்கள் சத்துருக்களை ஜயித்து, குலத்தையும் விருத்தி யடையச் செய்வான்' என்று தைரியம் கூறிச் சென்றனர்.

சக்கரபாணி என்னும் அரசன் ஏகசக்ராதிபதியாய் நீதிதவறாமல் மைதல தேயத்தை ஆண்டுவந்தான். அவன் மனைவியின் பெயர் உக்கிரை. அவனுக்குத் தர்மபுத்தி, சாம்பன் என்னும் மந்திரிமார் இருவர் இருந்தனர். அரசன் நெடுநாள் தனக்குப் புத்திரன் இல்லாக்

குறையினுல், மிகுந்த வருத்தமடைந்து, அநேக தான தருமங்கள் புரிந்ததுமன்றி யாகம் முதலியனவும் செய்து வந்தான். பின்னர்ப் புத்திரர் பிறந்தும், பூமியில் வீழ்ந்தவுடன் இறந்து கொண்டே வந்தனர். அதனுல் அரசன் முன்னிலும் அதிக துக்கத்தை அடைந்தான்; தன் ராஜ்யத்தை மந்திரிகள் வசம் ஒப்பித்து விட்டு, தவத்தை மேற்கொள்ளத் தன் மனைவியோடும் வனத்திற்குச் சென்ருன்.

தீர்த்த யாத்திரையாகச் சென்றிருந்த சௌனக முனிவர் கானகத்தின் வழியே போகையில் தற்செயலாய் அரசனைச் சந்தித்தார். அரசன் அவரைப் பணிந்து, தான் பத்தினியோடு வனத்திற்கு வர நேர்ந்த காரணத்தைத் தெரிவித்தான். அதன்மேல் சௌனக முனிவர் அரசனை நோக்கி, 'நீ வனத்திற்கு வர வேண்டியதில்லை; சூரிய விரதத்தை அனுஷ்டிப்பாயானுல் உனக்கு ஒரு புத்திரன் உண்டாவன். திரும்பிப் போய்ப் பழையபடி உனது அரசாட்சியை நடத்திக்கொண்டு இரு' என்று சொல்லி, சூரிய விரதத்தை அனுஷ்டிக்கும் முறையினை உபதேசித்தருளினர். முனிவர் கூறிய விஷயங்கள் அனைத்தையும் அரசன் அன்போடு கேட்டு அவரிடம் விடை பெற்று, தன் மனைவியுடன் கண்டக நகரத்தை மீண்டும் அடைந்தான்.



## 2. சிந்துவின் ஜனனம்

சக்கராதிபதியாகிய சக்கரபாணி தன் நகரம் அடைந்ததும் முனிவர் கூறிய விரதத்தைச் செய்து முடித்தனன். அதனால் சூரியபகவான் சந்தோஷித்து, அரசன் பத்தினி உக்கிரை என்பாள் கர்ப்பமடைய அநுக்கிரகம் செய்தார். உக்கிரை கர்ப்பம் அடைந்ததும் தன் சரீரத்தில் தோன்றிய வெப்பத்தைச் சகிக்க மாட்டாதவளாய், சிந்துநதிக் கரையிலுள்ள பூஞ்சோலைகளில் எந்த நேரமும் உலாவிக்கொண்டும், சந்தனம் பனிநீர் முதலியவைகளைப் பூசிக்கொண்டும் தன் சரீரத்தில் உண்டான அழற்சியை ஆற்றி வந்தாள்.

இப்படிச் சிந்துநதிக் கரையில் வசித்துக் கொண்டிருந்தபொழுது உக்கிரை தேவர்களெல்லாம் அஞ்சத்தக்க புதல்வன் ஒருவனைப் பெற்றாள். அந்தச் சிசு பிறக்கும்போதே இரண்டு கரங்களிலும் சூலமும் சக்கரமும் ஏந்திக்கொண்டு, கடலோசையுங் கண்டு நடுங்கும்படி பெருங் குரலோடு தோன்றிற்று. அத்தகைய புதல்வனை உக்கிரை பார்த்துப் பயந்து மூர்ச்சை யடைந்தாள். அப்போது அங்கிருந்த பாங்கியரெல்லாரும் நடுங்கி ஓடி யொளித்தனர். பின்னர், உக்கிரை ஒருவாறு மூர்ச்சை தெளிந்து, குழந்தையுடன் சிலநாள் வரையில் அவ்விடம் தங்கி

யிருந்து, அதன் பின்னர் அரண்மனை அடைந்தனள். அரசன் மனமகிழ்ந்து சிந்துநதிக் கரையில் பிறந்த புதல்வனுக்குச் சிந்து என்று பேரிட்டு, அளவற்ற தான தருமங்களை நடத்தி, திருவிழாக் கொண்டாடினன்.

சிந்து என்பவன் நாளுக்குநாள் அதி வல்லபத்துடன் வளர்ந்து, சோலைகளிலும் நதிகளிலும் விளையாடி வந்தனன். அவன் நிலத்தினின்றும் துள்ளி ஆகாயத்திற் பாய்வான்; சந்திரனைப் பிடித்துப் பிழிந்து அமுதபானம் செய்வான்; தேவேந்திரனுடைய ஐராவதம் என்னும் வெள்ளையானையைப் பிடித்திழுத்து அதன் முகத்தில் அறைவான்; அதன்மீதேறித் திக்குகள்தோறும் சென்று வருவான்; சமுத்திரங்களிற் பாய்ந்து அவைகளைக் கலக்குவான்; அஷ்ட திக்குகளிலுமுள்ள கஜங்களைத் துரத்தி ஓடச் செய்வான்; பூமியதிரப் பர்வதங்களைப் பிடித்து அசக்குவான். இப்படிப்பட்ட சிறுவனை அசுரகுருவாகிய சுக்கிராசாரியர் கண்டு, 'இவனால் அவுணர் குலம் விருத்தியடையச் சந்தேகமில்லை' என்று சந்தோஷித்தார். இவனுக்கு எக்காலத்தும் குறையாது பலத்தைக் கொடுக்கும் மந்திரங்களை அதிக விசுவாசத்துடன் அசுரகுரு உபதேசித்தார். சிவபெருமானைக் குறித்துத் தவஞ்செய்து அளவற்ற வரங்களைப் பெறவும் அவர் இவனைத் தூண்டி

ளூர். பின்னும், 'நீ அசுரகுலம் தழைத்தோங்கச் செய்து, மூவுலகத்தாரும் பணிசெய்ய, திரி லோக கண்டகனுய் வாழக்கடவாய்' என்று சுக்கி ராசாரியர் ஆசீர்வதித்துச் சென்றூர்.

சிந்து தனக்குப் பதினூறு வயதானதும் சுக்கிராசாரியர் ஆக்கியாபித்தபடி கானகத்திற் சென்று சிவபெருமானைக் குறித்து அரிய தவஞ்செய்தான். சிவபெருமான் மனமகிழ்ந்து, மூன்று உலகங்களை ஆட்சி செய்யவும், தேவர் முதல் யாவரும் பணிசெய்யவும், கணேசமூர்த்தி யாலன்றி மற்றவரால் யாதொரு கெடுதியும் நேராமலிருக்கவும் அவனுக்கு வரமளித்தனர். பின்னர், சிந்து தவத்தை முடித்து மீண்டும் கண்டகநகரம் வந்து சேர்ந்தான். இத்தகைய வரங்களைப் பெற்று வந்த புத்திரனைத் தந்தை யாகிய சக்கரபாணி ராஜன் கண்டு, ஆனந்தங் கொண்டு, ஆலிங்கனஞ் செய்துகொண்டான். பின்னும் அவன் தனது அரசுரிமையைத் தன் மைந்தனிடம் ஒப்பித்தான்.



# 3. சிந்துவின் ஆட்சி

இப்பால் சிந்துராசன், மித்திரன் கவுத்துவன் என்னும் இருவரைத் தனக்கு மந்திரிகளாக அமைத்துக்கொண்டு மூன்று உலகங்களையும் வெல்லுமாறு படையெடுத்துச் சென்றான். முதலில் அவன் பூவுலக முழுவதையும் தனது ஆணைக்கு உட்படுத்தினன். பின்னர், இவ்வுலகிலுள்ள சகல ராக்ஷசர்களையும் கூட்டிக்கொண்டு சொர்க்க லோகஞ் சென்றான். அங்கு இந்திரனோடு யுத்தஞ்செய்து அவனையும் தோற்கடித்துத் தெய்வ லோகத்தைத் தன் வசமாக்கிக் கொண்டான். சிலகாலம் அவ்விடத்திற்றானே இருந்து, சம்பன் நிசம்பன் என்னும் இரண்டு அசுரர்களை அவ்விடத்தில் நிறுத்தித் தெய்வ லோக ஆட்சியைக் கவனிக்கும்படி செய்து, அவன் நாகலோகம் சென்றான்; அங்கேயுள்ள நாக ராஜர்களையும் வணங்கும்படி செய்து மீண்டும் பூவுலகம் வந்து சேர்ந்தான்.

இப்படி மூன்று உலகங்கட்கும் தனது கண்டக நகரத்தை இராஜதானியாக்கிச் சிந்து அரிய சிம்மாதனத்தில் அமர்ந்து ஏகசக்ராதிபதியாய் அரசு செலுத்தி வந்தான். தேவேந்திரன் தனது அரசிழந்து சிந்துவினால் காவலில் வைக்கப்பட்டான். ஒருநாள் இந்திரன் வண்டுரு எடுத்து வைகுந்த மடைந்து திருமாலைப்

பணிந்து, நடந்தவைகளைத் தெரிவித்தான். அதன்மேல் மகாவிஷ்ணு சேனைகளைக்கூட்டிக் கொண்டு வந்து சிந்துவுடன் யுத்தம் செய்தார். யுத்தத்தில் அசுரனுடைய பராக்கிரமங்களைக் கண்டு மகிழ்ந்த திருமால் 'என்ன வரம் வேண்டும்?' என்று கேட்டனர். அதற்கு அவன், 'நீர் உமது சேனைகளுடன் என் நகரத்திலிருந்து என்னையும் என் நகரத்தையும் காத்தல் வேண்டும்' என்றான். திருமால் தம் சொல்லைக் காப்பாற்றும் பொருட்டு அவன் கேட்டபடி செய்யச் சம்மதித்தனர். இது இப்படியாக, முனிவர்க ளெல்லாரும் ஜபம், தபம், யாகம் முதலியன செய்ய இயலாதவர்களாய்க் கைலைக்குப் போய், சிவபெருமானைக் குறித்து அரிய தவஞ்செய்தனர். அப்போது சிவபெருமான் அவர்களுக்குத் தரிசனம் தந்து, 'சீக்கிரத்தில் கணேசர் தோன்றி உங்கள் துயர்களைக் களைவார். அவரே சிந்துவைச் சங்கரித்து, தேவர்களைச் சிறையினின்றும் விடுவிப்பார்' என்று அனுக்கிரகம் செய்து மறைந்தனர்.

## 4. கணபதியின் திரு அவதாரம்

இளவேனிற் காலம்வர, குளிர்ச்சிவேண்டிச் சிவபெருமான் தமது தேவியாரோடு கைலை மலைச்சாரலில் உள்ள உய்யானவனத்தையடைந் தனர். அதிலுள்ள கொன்றை, கோங்கு, மந் தாரம்,சண்பகம் முதலியவிருக்ஷங்களில் மலர்ந் திருந்த மலர்களின் அலங்காரங்களை யெல்லாம் பார்த்துக்கொண்டே வந்து, சிவபெருமான் அங்கிருந்த சித்திர மண்டபத்திற்குள் சென் றனர். அம் மண்டபத்திற்குள் ஒரு பக்கத்தி லிருந்தபளிங்குமேடையின்மேல் மகாதேவரும் உமாதேவியாரும் அமர்ந்து சுவர்களில் எழுதி யிருந்த சித்திரங்களைப் பார்த்துக்கொண்டே இருந்தனர். அவைகளில் ஒன்று பிரணவ வடி வத்தை யானைகளின் உருவங்களில் அமைத்துக் காட்டியது. சிவபெருமானும் உமாதேவியாரும் அவ் வுருவத்தைச் சற்று நிதானித்து அன் போடு பார்த்தனர். அப்போது அந்தப்பிரணவ சொரூபத்தி னின்றும், கோடி சூரியர்கள் ஒன்று சேர்ந்து உதயஞ் செய்ததுபோல, ஒரு ஜோதி தோன்றிற்று. அதன் மத்தியினின்றும் கணேசமூர்த்தி குழந்தை யுருவாய் வெளிப் பட்டுச் சிவபெருமானையும் உமாதேவியாரையும் பணிந்தனர்.

உடனே அவ் விருவரும் ஆனந்தங் கொண்டு, விநாயக மூர்த்தியைப் பரிவோடு

எடுத்து அணைத்து, உச்சிமோந்து, உள்ளம் பூரித்து, அவருக்குக் கணபதி என்று பெயரிட்டுத் தங்கள் மடியின்மீது வைத்துக்கொண்டனர். பின்னர், சிவபெருமான் அச் சித்திர மண்டபத்தை விட்டு, உமாதேவியார் கணபதியைக் கையிலேந்திக்கொண்டு வர, கைலாயம் அடைந்தனர்.

அப்படிப் பிள்ளையார் தோன்றிய காலம் ஆவணி மாதம் பூர்வபட்சம் சதுர்த்தி கூடிய சுபதினமாகும். அன்றைத்தினம் சந்திரன் அஸ்த நட்சத்திரத்தில் சஞ்சரித்தான். இத்தினத்தில்தான் பிள்ளையார் சதுர்த்தி விரதம் நமது நாட்டில் அனுஷ்டிக்கப்பட்டுவருகிறது.



## 5. கணபதியின் பாலலீலை

கணேசர் யானைமுகத்தோடு வெண்ணிற மேனியும், நான்கு கைகளும், மூன்று கண்களும் அதிக பராக்கிரமமும் உள்ளவராய், முனிவர்கள் பலர் பணிய, வளர்ந்து வந்தனர். இந்தப்படி வளர்ந்து வருவதைக் கேள்வியுற்ற சிந்து, சிவபெருமான் சொல்லிய கணேசமூர்த்தியே இப்பொழுது அவதரித்தனரோ என்று எண்ணினான்; எண்ணியதும் உடல் நடுங்கினான். 'இதற்கு இனி என் செய்வோம்' என்று மனத்தில் கவலைகொண்டான். அச் சமயத்தில், 'உன்னை அக் கணேச மூர்த்தியே சங்கரிப்பர்' என்று ஆகாசவாணி சொல்லிற்று. அதனைக் கேட்டவுடனே அசுரன் புண்ணில் கோல்பட்டதுபோல மனம் நொந்து, பின்னர்க் கோபித்து, 'அந்தக் குழந்தையை எப்படியேனும் யான் வதைத்து வருவேன்' என்று குதித்தெழுந்தான். அப்பொழுது கவுத்துவன் என்னும் மந்திரி சிந்துவைப் பணிந்து, 'ஆண்டவனே! பிரமன், விஷ்ணு முதலிய தேவர்களும் முனிவர்களும் அஞ்சலிசெய்து நிற்கும்படியான பராக்கிரமம் வாய்ந்த தாங்களோ தொப்புட்கொடி வாடாத ஒரு குழவியைச் சத்துருவாக மதித்து நேரிற் போவது? யுத்தத்திலும் மாயையிலும் வல்ல அசுரர்களை இரகசியமாக அனுப்பி, அவர்




கணபதியின் பாலலீலைகள்

களால் அங்கிருப்பவர்கள் அறியாதபடி அக் குழந்தையை வதைத்துவரச் செய்வதே தகுதி' என்று சொன்னான். அதனைக் கேட்டு சிந்து அதன்படியே செய்யச் சில அசுரர்களைக் கூவி, 'நீங்கள், எந்த உபாயத்தினாலேனும், எனக்குச் சத்துருவாய் அவதரித்துள்ள அந்த யானை முகச் சிசுவை வதைத்து வரவேண்டும்' என்று ஆக்கியாபித்தான்.

அதன்படியே பிரதி தினமும் ஒருவர்பின் ஒருவராகப் பல அசுரர்கள் பற்பல மாயா ரூபங்களுடன் சென்று, அக்கணேச சிசுவை வதைக்க முயன்று தாமே வதையுண்டனர். அவர்களில்,

(1) வியோமாசுரன் என்பவன் உமையம்மையின் உய்யானவனத்தில் ஆகாயத்தை அளாவிய ஒரு மாமரமாக உருக்கொண்டு நின்றான். அதில் காய்த்துப் பழுத்த கனிகளை முனிகுமாரர்கள் தின்று அவ்விடத்திலேயேமபக்கமடைந்து விழுந்து மடிந்தனர். அதனால் சுற்றிலுமுள்ளோர், 'இது என்ன மாயமோ!' என்று திகிற்பட்டு மிகவும் வருந்தினர். இம் மாயத்தை நமது பாலகணபதி அறிந்து அம் மாமரத்தருகில் தவழ்ந்து வந்து, அதனில் இருந்த ஒரு பொந்தினுள் நுழைந்தனர். உடனே அந்தப் பொந்து யானைமுகக்கடவுளை உள்ளே அடக்கி மூடிக்கொண்டது. அப்போது அருகி

லிருந்த முனிவர்கள் இதைக் கண்டு நடுங்கி உமாதேவியாரிடம் ஓடித் தெரிவித்தனர். அம்மையார் வருமுன்னரே நமது ஐங்கரமூர்த்தி உள்ளிருந்தே மரத்தை அலைத்துப் பிளந்து, தூணினின்றும் உதித்த நரசிங்கத்தைப்போல, வெளிவந்தனர். அம் மரத்தின் பழத்தைத் தின்று அருகில் இறந்துகிடந்த முனிகுமாரர்களைத் தம் அருட்கண் பார்வையினுல் உயிர்பெற்று எழச் செய்தனர். பிள்ளையார் மரத்தைப் பிளந்து வெளி வந்ததும், வானத்தை முட்டிநின்ற அம் மாமரமானது முறிந்து மலைபோல் பருத்த அசுர தேகத்தோடு பூமி அதிரக் கீழே விழுந்தது. இவ்விதமாக வியோமாசுரன் அழிந்ததைக் கண்டு தேவர்கள் முதலானோர் கணநாதரின்மேல் பூமாரி பொழிந்தனர்.

(2) ஒருநாள் கிருத்திராசுரன் என்பவன் கழுகு ரூபங்கொண்டு உமாதேவியார் மடியின் மீதிருந்த பாலவிநாயக மூர்த்தியின்மீது சரேலென்று பாய்ந்து இவரை எடுத்துக்கொண்டு ஆகாயத்திற் பறந்தான். நமது இளஞ் சிங்கமாகிய கணநாதர் தம்மை எடுத்துச் சென்ற கழுகின் கழுத்தை ஒருகரத்தாற்பிடித்து நெறித்தனர். கிருத்திராசுரன் மடிந்து பூமியில் வீழ்ந்தான். கணேசர் உமாதேவியின் மடிமீது வந்து அமர்ந்தனர்.

(3) பிள்ளையார் ஓர் இரவு தொட்டிலில் படுத்திருந்தபோது தொட்டிலை அசைத்து ஆட்டுவான்போல வந்த கமடாசுரனை உதைத்துக் கொன்ருர்.

(4) ஒரு சமயம் கணநாயகர் சில முனி புத்திரர்களோடு அருகிலிருந்த ஒரு தடாகத்தில் ஸ்நானஞ் செய்துகொண் டிருந்தனர். அப்போது அவர்கள் அத்தடாகத்தில்படர்ந்திருந்த கொடிகளை நீக்கி மலர்களைக் கொய்து ஒருவர் மேல் ஒருவர் வீசி யெறிந்து விளையாடினர். விகிர்தாசுரன் என்பவன் ஒரு பெரிய மீனுக உருவெடுத்து இங்கும் அங்கும் ஓடி நீரை அலைத்து அத் தடாகத்தில் விளையாடிக்கொண் டிருந்த சிறுவர்களைச் சிதற அடித்து, நமது பாலசந்திர மூர்த்தியை விழுங்க வந்தனன். அப்பொழுது நமது சிவகுமாரர் அதன் வாலை இறுகப்பிடித்து இழுத்துக் கரையில் மோதி அடித்தனர். அவ்வசுரன் பெருங் குரலோசை யிட்டு விழுந்து மடிந்தனன்.

(5) நாள் ஒன்றுக்கு நூறு எருமைகளைத் தின்று வருவதால் சதமைடபக்ஷிணி என்னும் பெயருள்ள ஓர் அசுரமாது அழகிய தேவ மாதைப்போல்உருக்கொண்டு வந்துதொட்டிலிலிருந்த நமது பாலகணபதிக்குப் பால் கொடுத்துக் கொல்ல முயன்ருள். இவர் பாலுண்பதே

போல் அவள் உயிரையும் உறிஞ்சி அவளைத் தரையில் விழச் செய்தார்.

(6) பார்வதீ புத்திரராகிய கணபதி ஐந்து வயது ஆனதும், ஒருநாள் வனத்தினின்று நீங்கித் தமது ஆலயம் நோக்கி வருகையில், இடும்பாசுரன் என்பவன் வழியில் ஒரு பெருங் கருங்கற் பாறையாக ஆகாயத்தை ஊடுருவ வளர்ந்து நின்று வழியை அடைத்தான். அதன் உண்மையை நமது பால கணபதி அறிந்து தம்முடன் வந்த சிறுவர்களுடன் விளையாடிக் கொண்டே போய், தமது முதுகினால் அப் பாறையை மோதித் தாக்கினர். அப்போது அந்தப் பாறை பிளந்து உருவழிந்து, அசுர னது உண்மை யுருவோடு கீழே விழுந்தது. இவ்வற்புதத்தைக் கண்டு எல்லாரும் ஆநந்த மடைந்து விநாயகரை வாழ்த்தினர்.

(7) ஒருநாள் பாலகணேசர் தேவ குமாரர்க ளுடன் உய்யானவனத்தில் பந்து அடித்து விளை யாடிக்கொண் டிருந்தனர். அச் சமயம் சஞ்சலா சுரன் என்பவன் ஒரு தேவ குமாரனைப்போல் வேடம் பூண்டு வந்து இவர்களுடன் கலந்து ஆடிக்கொண் டிருந்தான். எல்லாமறிந்த நமது இறைவன் இதை அறியாதிருப்பரோ ! அப் போது அவ் வசுரனை ஆட்டத்தினாலேயே அழிக்க வேண்டுமென்று கருதினர். அதை

யுணர்ந்த அவுணன் ஆகாயத்தில் தன் சுவய ரூபத்தோடு தோன்றினன். மகாகணபதி அவன் அறியாமைக்குப் புன்னகை புரிந்து, கையிலிருந்த பந்து அவன் மண்டையிற் போய்த்தாக்க, வளைதடியால் ஓங்கி அடித்தனர். அது அவனது கபாலத்தைத் திறந்து ஆவியைப் போக்கி, உடலைத் தரையில் வீழ்த்தியது. அது கண்டு தேவரும் முனிவரும் பால விநாயக மூர்த்தியின்மேல் மலர்மாரி பொழிந்தனர். திருமாலானவர் தந்திமுகனைத் தூக்கியெடுத்து மடியில்வைத்து மகிழ்ச்சியடைந்தார். பின்பு, அவர் அச் செல்வச் சிறுவனை எடுத்துச் சென்று, உமாதேவியிடம் விட்டு, அவர் ஆட்டத்தில் அவுணனைக் கொன்ற விதத்தை வியந்து கூறி விடை பெற்றுச் சென்றார்.

(8) ஒருநாள் சபலாசுரன் என்பவன் எட்டுக் கால்களும், இரண்டு தலைகளும், அழலைப் போன்ற விழிகளும், பிறைபோல் வளர்ந்த கோரைப் பற்களும் உடைய சரபப்பட்சி உருக்கொண்டு தன் சிறகை விரித்து, ஆகாய மார்க்கமாய்ப் பறந்து வந்தான். அவன் பறந்துவந்த வேகத்தினால் மலைகளெல்லாம் அசைந்து இடம் பெயர்ந்தன; சமுத்திரங்கள் பொங்கிக் கரை புரண்டன; பூவுலகிலுள்ளவர்கள் எல்லாரும் நடுங்கினார்கள். அப்போது நமது சிவகுமாரராகிய கணேசமூர்த்தி அஞ்சாமல் நெடுக

வளர்ந்து அச் சரபத்தினுடைய கால்களைப் பற்றி இழுத்து, ஒரு பெரிய பாறையின்மீது மோதிக் கொன்றார். இதைக் கண்ட முனிவர் அனைவரும் ஆச்சரியங்கொண்டு நமது பிள்ளையாரை வாயார வாழ்த்தினர்.

(9) வீமாசுரன் என்பவன் இரண்டு அசுரர்களைக் காற்சிலம்புகளாகச் செய்து பார்வதி தேவியிடம் கொடுத்து, பிள்ளையாரின் திருவடிகளில் அணியும்படி வேண்டினன். எல்லாம் உணர்ந்த பிள்ளையார் இவ் வஞ்சகத்தை அறியாதவர்போல் அவைகளை வாங்கி மகிழ்வுடன் தமது திருவடிகளில் அணிந்துகொண்டு ஆனந்தக் கூத்தாடினர். அப்போது தேவர், முனிவர், கின்னரர், கிம்புருடர், சித்தர், வித்தியாதரர், பூதர், பைசாசர், பூவுலக வாசிகள் முதலிய யாவரும் ஆடினார்கள். சிலம்புகளாயிருந்த இரண்டு அசுரர்களும், அந்தக் கள்ளக் கூத்தினால் அலைப்புண்டு சகிக்கமாட்டாதவர்களாய், வருந்தி வாடினர். அது கண்டு கணேசமூர்த்தி எதிரில் நின்ற வீமாசுரன்மீது தமது பாதங்களை வீசி உதறினர். சிலம்புகளாயிருந்த இரண்டு அசுரர்களும் தங்கள் சுவயரூபத்தோடு வீமாசுரன்மேல் விழ, அம் மூவரும் ஒருங்கே மாண்டனர். இதைக் கண்டு யாவரும் சந்தோஷித்து, ‘வேதச் சிலம்பை அணியும் இவ் விநாயகனுக்கு, இம் மாயச் சிலம்புகளை மாய்ப்

பது அரிதோ! அரிதோ!' என்று வியந்து பணிந்து துதிசெய்தார்கள்.

(10) மற்றொரு நாள் ஆவிசன் என்னும் அவுணனொருவன் ஒரு மதயானையைப்போல் உருக்கொண்டு திசைகள் எட்டும் நடுங்க அட்டகாசம் செய்து, பிள்ளையார் முனிச்சிறுவர்களோடு விளையாடிக்கொண்டிருந்த வனத்திற்குப் பாய்ந்தோடி வந்தான். யானையைக் கண்டதும் முனிச்சிறுர்கள் அனைவரும் பயந்தோடினர். கணேச மூர்த்தி, 'அஞ்சவேண்டா' என்று அவர்களுக்குக் கையமர்த்தி, யானையின் மேல் பாயும் சிங்கக்குட்டியேபோலப் பாய்ந்து, மும்மதங்களும் அருவிபோலப் பாயும்படி காதிற் புடைத்து, தந்தங்கள் இரண்டினையும் கரத்தாற் பற்றி உடைத்து, அதன் கழுத்தின்மேல் குதித்தேறி, தமது காற்பெருவிரலைக் கழுத்தில் ஊன்றி, அது இடியோசையைப்போலப் பிளிறிட்டு விழச்செய்தனர். இதனைக் கண்டு பயந்து நின்ற தேவர்கள்முதல் யாவரும் வேழமுகனை வாழ்த்தினர்.

(11) அசகாசுரன் என்பவன், பூமியைத் தாங்கும் ஆதிசேடனே என்று எண்ணும்படி, ஒரு மலைப்பாம்பாக உருக்கொண்டு, உமாதேவி இருந்த சோலைக்குள்ளே ஊர்ந்து வந்தான். முனிபுத்திரர்களுடன் விளையாடிக்கொண்

டிருந்த மூத்த பிள்ளையாரை அப் பாம்பு தாவி வளைத்து, சந்திரனை இராகு விழுங்குவதே போல், விழுங்கிற்று. உடனே நமது ஐயன், உதயகிரியில் எழுந்த இளஞ் சூரியனைப்போல், அம் மலைப்பாம்பின் வயிற்றைக் கீறிக்கொண்டு வெளியே வந்தனர். இதனால் அசகாசுரன் மாய்ந்தான். அவ் வசுரனைப் பிளந்ததினால் திரு மேனி முழுதும் உதிரம் வழிந்தோடக் கணபதி உமாதேவியாரிடம் சென்றனர். அது கண்டு உமாதேவியார் ஆச்சரியமுற்றுத் தம் குமாரனை அங்கு ஓடிய அருவியில் நீராட்டி அழைத்துக் கொண்டு தமது கோயிலை யடைந்தனர்.

(12) மகா கணபதியின் மகிமை யறியாது, குழந்தையென நினைத்து, மதியீனத்தால் வந்த அரக்கர்களையெல்லாம் அவர் எளிதில் மாளச் செய்தனர். இப்படி துஷ்டர்களைத் தண்டித்தது போல, சிஷ்டர்களை ரக்ஷித்துக்களிக்கவும் செய் தார். தாம் இருந்த வனத்திற்கு அருகிலிருந்த முனிபத்தினிகள் அகங்களிக்க, நமது பிள்ளை யார், குறுநடை நடப்பர்; அவர்கள் கண்டு மகிழ அவரது மடித்தலத்தில் அமர்வர்; அவர் சடைகளைப் பிடித்துஇழுப்பர்; சிலரை அடித்து விட்டு ஓடுவர்; அவர்கள் பின்தொடர மரத்தில் ஏறி ஒளிப்பர்; அவர்கள் கண்களைப் பொத்தித் திறப்பர்; கைகொட்டிச் சிரித்து ஆடுவர். இப் படிப் பற்பல ஆடல்களைச் செய்துவந்தனர்

சிவகுமாரர் இத்தகைய திருவிளையாடல்கள் செய்து வருவதைத் தேவர்களும் முனிவர்களும் கேட்டு ஆனந்தித்து, 'நமது அல்லல் தீர்க்க அநவரத விநாயகன் தோன்றினன்; இனி நமது இடர்களைக் களைவான்; இன்ப மூட்டுவான்' என்று பலவாறு புகழ்ந்து தோத்திரம் செய்து, எந்நேரமும் அவருடைய குணானுபவங்களைக் கூட்டங் கூட்டமாகக் கூடிப் பாடி ஆடி வந்தனர்.

சூரியனுடைய கிரணங்களைக்கொண்டு பரசு, தாமரை, பாசம், அங்குசம் என்னும் இவைகளைச் செய்து தேவதச்சனாகிய விசுவகர்மா, சிவபெருமானையும் உமாதேவியாரையும் பணிந்தெழுந்து, கணேச மூர்த்தியின் திருவடிக்கு முன்னே வைத்து ஒருநாள் வணங்கினன். அவைகளைப் பிள்ளையார் சிவபெருமானது அனுமதி பெற்று அங்கிகரித்தனர். பின்னும், அவைகளைக் கணநாதர் துஷ்டரைச் சிக்ஷிக்கவும் சிஷ்டரை ரக்ஷிக்கவும் மேற்கொண்டனர்.



## 6. போர் முயற்சி

அவுணர்கள் பலர் பற்பல மாயங்களைச் செய்து மகா கணபதியை மாய்க்க முயன்றும் முடியாமற்போனதினால், மண்டலாதிபதியாய்க் கண்டக நகரத்தில் காவல் செய்துவந்த சிந்து என்பவன் சிந்தை யழிந்தான். 'இச் சிறுவனை என்ன செய்வது' என்று மறுபடியும் சிந்தித்தான், சினங்கொண்டான்; மந்திரிகளை ஏவி வல்லரக்கர்களை வரவழைத்து, வல்லப விநாயகனைப் பின்னும் வருத்த வகை தேடினன். அப்போது மந்திரிகளில் ஒருவனான மித்திரன் எழுந்து அசுரன் அடியிற் பணிந்து, 'ஆண்டவனே, சுத்தவீரனே! சிவகுமாரராகிய கணேசர் வயதிற் சிறியவராயினும் யுத்தத்திற் பெரியவராய் மாயையில் வல்ல மல்லர்களையெல்லாம் மாய்த்து ஒழித்தனர். தமது இளமைப் பருவத்திற்றானே அநாயாசமாய் அசுரர்களை அலைத்து அழித்தனர் என்றால், இப்பொழுது நம்மையும் நம்மைச் சேர்ந்த படையையும் அழிப்பது அவர்க்கு அரிதோ! ஆகையால், அவரைப் பணிந்து அருள் பெறுவோம்' என்றனன்.

இதைக் கேட்டுச் சிந்து, கனலேபோல் கண்கள் சிவக்க, நரநரவெனப் பற்களைக்கடித்து, அண்டங்கள் அதிர நிலத்தை உதைத்து, 'அடா பேதாய், நீயோ எனக்குப் புத்தி புகட்டுபவன்.

மதியில்லா மூடனே, வீரமில்லா விட்டால் மூலை யில் கிட. ஏ கனலாசுரா, நீ இப்போதே போய் நமது நால்வகைச் சேனைகளையும் கூட்டி, அந்த யானை முகத்தோனிடம் யுத்தம் செய்து ஜயம் பெற்று வா' என்று ஏவினன்.

இதைக் கேள்வியுற்றுத் தேவர்களும் முனி வர்களும் அஞ்சி யோடிக் கைலாயம் அடைந்து சிவபெருமானைப் பணிந்து, 'மாகாதேவரே, சிந்துவின் ஏவலினால் கனலாசுரன், பல்லா யிரம் சேனைகளுடன், இரணபேரிகை முழக்கி நமது கணநாயகனை நோக்கி வருகின்றான். அவனை வதைத்து அசுரேந்திரனாகிய சிந்து வையுங் கொன்று எங்களை ரட்சியும்; எமக்கு அருளிய வாக்கின்படி தமது மூத்தபிள்ளையாரை அனுப்பிப் போர்க்கோலங் கொண்டுவரும் பரம துஷ்டர்களைப் போக்குவீர்' என்று பிரார்த்தித்த னர். சிவபெருமான் இதைக்கேட்டு, உமாதேவி யின் மடியில் அமர்ந்திருந்த ஆனந்த விநாய கரைக் கருணையுடன் நோக்கி, 'குழந்தாய், நீ சென்று அச் சிந்துவை வென்று வெற்றிமாலை அணிந்து வருக' என்று ஆக்கியாபித்துச் சூலாயுதம் ஒன்றை அளித்தனர். உமாதேவி யாரும் தமது குமாரனை அணைத்து உச்சி மோந்து, 'பிள்ளாய், நீ சென்று சிந்துவைச் சங்கரித்து ஜயமடைந்து வருவாய்' என்று ஆசீர்வதித்து அனுப்பினர்.

அதன்படியே கணேசமூர்த்தி சர்வாபரண பூஷிதராய், சர்வாயுத பாணியாய், சிவபெருமானையும் உமாதேவியாரையும் பணிந்து விடை பெற்று அங்குள்ள தேவர்கள், முனிவர்கள் அனைவரையும், 'அஞ்சாதீர்கள்' என்று கையமர்த்தினர். யுத்தத்திற்கு வேண்டிய நால் வகைப் படைகளையும் பூதசேனைகளையும் சிவகுமாரர் மனத்தாற் சிருஷ்டித்து, அவைகள் சூழ்ந்துவர, கனலாசுரன் இரணபேரி முழக்கும் இடத்திற்கு வந்து சேர்ந்தனர்.

ஆகாயத்தில் தேவர்கள் மூவர்கள் முதல் யாவரும் வந்து, நமது பாலகணபதி செய்யும் யுத்தத்தைக் காண நிறைந்து நின்றனர். இப்பால் பூதசேனைகளும், அவுணசேனைகளும் கைகலந்து போர்செய்தன. கடைசியில் அசுரர்கள் பூத சேனைகளை எதிர்க்கமாட்டாது கையொடிந்தும், காலொடிந்தும், மடிந்தும், விழுந்தும் போனவர் போக மற்றவர் உயிர்க்கு அஞ்சியோடினர். அதைக் கனலாசுரன் கண்டு, ஆலகாலத்தைப் போலச் சீறி, ருத்திராஸ்திரத்தை எடுத்து விடுத்தனன். அதைக் கணபதி கண்டு மகிழ்ந்து, 'வருக, வருக' என்று வரவேற்றனர். அண்டங்களை யெல்லாம் அதஞ்செய்து வந்த ருத்திராஸ்திரம், கணநாதர், 'வருக, வருக' என்றதும், அவரது அம்பருத்தூணியில் வந்து அடங்கிற்று. இதைக் கண்டு கோபித்துக் கனலா

சுரன் பற்பல மாயங்களினுல் மகா கணபதியை மாய்க்க எண்ணினுன். அம் மாயங்கள் மாண்டு போயின. கணநாதர் சூலாயுதத்தை நோக்கி, 'கனலாசுரனே வதைத்துவா' என்று விடுத்தனர். அது சென்று கனலாசுரன் மார்பிற் பாய்ந்து, அவனை நீருக்கி, கணேசரிடம் வந்து சேர்ந்தது.

இதை ஒற்றர்களால் கேள்வியுற்ற சிந்து, மூன்று உலகங்களிலு மிருந்து வரவழைத்து வைத்திருந்த அரக்கர் சேனைகள் அனைத்தையும் ஒருங்கே கூட்டி, தானே நேரில் வீரகணபதியை எதிர்த்து யுத்தம்செய்ய ஏற்பாடுசெய்தான்.

அதை அறிந்த கணேசர் தேவர்களுடனும் முனிவர்களுடனும் ஆலோசித்து, சிந்துவினிடத்தில் முன்னதாக ஒரு தூதனை அனுப்பி நற்புத்தி புகட்டவும் அதன் மேலும் அவன் நல்வழிக்கு வாராவிட்டால், அவனேடு யுத்தம் செய்யவும் தீர்மானித்தார். நந்திதேவரை அழைத்து,'நந்திதேவரே, அச்சிந்துவினிடத்திற் போகவும் பேசவும் வல்லவர் தாம் ஒருவரே; ஆகையால், நீர் சென்று அவனுக்கு வேண்டிய புத்திமதிகளைச் சொல்லி, தேவர்களைச் சிறையினின்றும் நீக்கச் செய்வீர். இல்லையேல், அவன் உயிரை இழக்க இப்போதே யுத்தத்திற்கு வருமாறு சொல்லி வாரும்' என்று சொல்லி அனுப்பினர்.



## 7. நந்திப்பெருமான் தூது

அப்படியே நந்திதேவர் மிக்க விநயத்தோடும் கேட்டுக்கொண்டு, கணேசரைப் பணிந்து அவ்விடத்தைவிட்டு நீங்கிச் சிந்துவினுடைய கொலு மண்டபத்தை அடைந்தனர். அங்கு அவர் அரிய சிம்மாதனம் ஒன்றைத் தமது மனத்தினாற் சிருஷ்டித்து, வீரபராக்கிரமத்தோடும் அதில் வீற்றிருந்தார்.

தனக்கு ஒருவர் எதிரில் வீரசிங்கம்போலத் திடீரெனத் தோன்றி அமர்ந்திருக்கும் அதிசயத்தைச் சிந்துராசன் கண்டு, அடங்காத கோபங் கொண்டான்; 'எனது அளவற்ற காவல்களைக் கடந்து என் முன் சரியாசனத்தில் அமர்ந்திருக்கும் நீ யார்? யாது காரியமாக இங்கு வந்தனை?' என்று கேட்டான். அதற்கு நந்திதேவர், 'அசுர, யாம் ஆதி அந்தம் இல்லாக் கணநாதரின் தூதன்; எம்மை நந்தி யென்று சொல்லுவார்கள். நீ அருமையாகிய தவங்களைச் செய்து ஒப்பற்ற வரங்களைப் பெற்றாய்; அவைகளின் பலனாக மூவுலகங்களையும் அடக்கியாளும் பாக்கியத்தினையும் பெற்றாய். இத்தகைய பேற்றினைப் பெற்ற நீ சன்மார்க்கத்தில் நின்று அரசாட்சி செய்து மன்னுயிரைத் தன்னுயிர்போலப் பாதுகாவாமல், குடிகளை வருத்துவதினால் அல்லவா அப் போக பாக்கியங்களை இழக்க வழிதேடினை.

'நிற்க, நீதான் அப்படியாயினும் உன்னை நாடி உண்டு வாழ்கின்ற பாபிகளாம் மந்திரிகளும் கொடுங்கோல் செலுத்துகின்ற உனக்கு நீதிமுறைகளை இதமாகச் சொல்லித் தெளிவித்து, உன்னை நல்வழிப்படுத்தாமற் போனார்களே! போனது போகட்டும், இனியாகிலும் நீ தேவர்களையும் முனிவர்களையும் சிறையினின்றும் நீக்கி, நீதி தப்பாமல் செங்கோல் செலுத்தி எல்லோரையும் ஆ த ரி த் து, சிவபெருமான் அருளாற்பெற்ற சகல ஐசுவரியங்களையும் நீடூழி காலம் அனுபவித்து வாழ்ந்திரு. இதை எம் பெருமானாகிய விநாயகமூர்த்தி உனக்குத் தெளிவாய்த் தெரிவிக்கும்படி கருணைகூர்ந்து கட்டளையிட்டு எம்மை அனுப்பினர். இந்தப்படிச் செய்ய உனக்கு மன மில்லையானால் இந் நிமிஷத்திலேயே உன் சேனைகளோடும் யுத்தத்திற்கு வரக்கடவை. ஆனால், யான் சொல்வதைக் கவனி. எமது கணநாயகனைப் பகைத்துப் பிழைப்பவரும் உண்டோ! அவரை எதிர்த்துப் போர் புரிவையானால், தேவர்களும் முனிவர்களும் மற்றையோரும் நகைக்கும்படி நலமிழந்து நமனுலகை அடைவை' என்றனர்.

சிந்து இவையனைத்தையும் கேட்டு, குலுங்க நகைத்துக் கண்களில் அனற் பொறிபறக்க, 'ஏ நந்தீ, பால்மணமாறாத உங்கள் குட்டிப்பிள்ளையாரின் புத்தியை மெச்சினேன்! உனது போத

னேகளும் மிக்க அழகாயிருக்கின்றன. யுத்தத்தில் என்ன நடக்கும் என்று உனக்குத் தெரியாது. கையில் வாளேந்த அறியாத சிறுவனைப் பராக்கிரமத்திற் சிறந்தவன் என்று பெரிதும் புகழ்ந்தனே ; என்னை ஜெயிக்கக்கூடிய ஒருவன் எவ்வுலகிலேனும் உளனே? என்னெதிரில் இறுமாப்புடன் பேசிய உன்னைத் தூதனென்று விடுத்தேன். நீ போய், அதிவீர பராக்கிரம சாலியும் தேவர்களைவென்று மூவர்களைப் பணி கொண்டவனும் ஆகிய சிந்துராசன் போர்க் கோலங்கொண்டு வருகின்றான்; அவனை எதிர்க்க வல்லபம் உண்டாயின், உங்கள் குட்டிப் பிள்ளையாரை ஓடாது நிற்கச் சொல்' என்றான்.

இதைக்கேட்ட மாத்திரத்தில் நந்திதேவருக்கு அதிக கோபம் உண்டாயிற்று. 'ஏ மூழு மூடா! உன்மதி உன் விதிவழியே சென்றது. எமது ஐயன் என்னைத் தூது போய்வா என்று கட்டளை யிட்டதினால் அதற்கிணங்கி உன்னைக் கொல்லாமல் விட்டேன். ஏ பதரே, நீ எனக்கு எம்மாத்திரம்! உன்னையும் இச் சபையிலுள்ள அனைவரையும் என் கையினாற் பிசைந்து பிழிந்து சேறாக்கி, உன் சேனைகள் அனைத்தையும் அதனுள் வீழ்த்தி அழுத்தி மாளச்செய்வேன் ; இக்கண்டக நகரத்தையும் நீறாக்கி இருந்தவிடம் தெரியாமற் செய்வேன். ஆனால், எனது இறைவன் ஆக்கினை அப்படியில்லை; அதனால் விடுத்

தேன். சகல வஸ்துக்களையும் ஆக்கவும் அழிக்கவும் வல்லவரான எமது விநாயகக்கடவுள் உன்னையும் உன்னைச் சேர்ந்தோரையும் யுத்தத்தில் கொன்று, தேவர்களையும் முனிவர்களையும் காப்பார்' என்று சொல்லி, உடனே தாம் அமர்ந்திருந்த அரியாசனத்துடன் மறைந்தார்.

இப்பால் நந்தியெம்பெருமான் கணேசரையடைந்து, அங்கு நடந்தவைகள் அனைத்தையும் அறிவித்தனர். அவைகளைக்கேட்ட பிள்ளையார் புன்னகை புரிந்தார். உடனே பூதப்படைகளை அணிவகுத்து, சிந்துவையும் அவனது நால்வகைச்சேனைகளடங்கிய கோட்டையையும் சுற்றி வளைத்து முற்றுகையிட ஆக்கியாபித்தார். அதன்படியே, நாற்பதுகோடி வீரர்கள் கூடிச் சென்று சிந்துவின் கோட்டையைச் சூழ்ந்து வளைந்து கொண்டனர்.

தனக்கு எக்காலத்தும் மரணமே இல்லையென்று இறுமாந்திருக்கும் சிந்து என்பவன் வச்சிரவாளை இடையிற்கட்டி, வீரகண்டையைக் காலில் தொடுத்து, போர்க்கோலந் தரித்து அதிக உற்சாகத்துடன், எழுகடலும் பொங்கி வந்ததேபோலத் தனது கோட்டைக்குள் கூடி, நிற்கும் நால்வகைச்சேனைகளின் மத்தியில் ஒரு பெரிய தேரிலேறி இரணபேரி முழங்க வந்து எதிர்த்து நின்றான்.

இதனை யறிந்து நாரதமுனிவர் விநாயகக் கடவுளைப் பணிந்து, சிந்துவின் வல்லபத்தை யும், அவன் சேனையின் பலத்தையும், இப் போதுயுத்தத்திற்குவந்திருக்கும்விதத்தையும், விவரமாக எடுத்துச் சொல்லினர். அப்போது அருகிலிருந்த நந்திதேவர், கணநாதரை வண ங்கி, 'யான் முன்னே சென்று அவனுடைய சேனைகளைச் சின்ன பின்னம் செய்து வருகி றேன். பிறகு தாங்கள் போகலாம்' என்று பணி வுடன் சொல்லினர். அதற்கு விநாயகப் பெரு மான் சம்மதித்து, 'அப்படியே செய்க' என்று ஆக்கியாபித்தனர்.

இப்பால் நந்தி யெம்பெருமான் அநேக பூதவீரர்களோடும் கோட்டைக்குள் ஒரு புறஞ் சென்று, சிந்துவினுடைய மந்திரிகளாகிய மித் திரன் கவுத்துவன் என்னும் அசுரர்களையும், அவர்களுடன் வந்த பல்லாயிரம் இராக்கதர் களையும் வாள்கொண்டு வெட்டி, கைவேறு கால் வேருகச் செய்து பஞ்செனப் பறக்கும்படி அடித்து நிர்மூலமாக்கினர்.



## 8. சிந்துவைச் சங்கரித்தல்

இதைக்கேட்ட சிந்து அடங்காக் கோபங் கொண்டு, மிருதியாய் நின்ற சேனைகளுடன் மண் ணுலகமும் விண் ணுலகமும் நடுங்கும்படி கர்ச்சித்து, மற்றொரு வாயிலாகக் கோட்டை யை விட்டு வெளியில் வந்து வில்லை வளைத்துப் பாணத்தைப் பூட்டி நேரே மகாகணபதியின் முன்வந்து நின்றான். அஸ்திரங்களை அமோக மாகப் பல திசைகளிலும் விட்டு, பூதகணங் களைச் சின்னபின்னமாக்கினான். அதனால் பூத வீரர்கள் வலியிழந்து, சரீரமெங்கும் அம்புகள் பாய்ந்து, உதிரம் வழிய இளைத்துக் களைத்துத் துடித்துப் பதைத்து மூர்ச்சித்தனர். இதைக் கண்ட கணநாதர், உடனே சிந்துவின்மேல் தண்டாயுதத்தைப் பிரயோகித்து, அவன் தேரி னையும் வில்லினையும் கவசத்தினையும் பொடிப் பொடியாக்கினர். பின்னும் சிந்து வேறொரு தேரில் ஏறி ரௌத்திராகாரமாய்க் கோபித்து, தனது நண்பன் சங்கன் என்பவன் கொடுத்த வேறொரு வில்லை வளைத்து, ஆயிரமாயிரமாகப் பாணங்களைத் தொடுத்துப் போர் செய்தான்.

விநாயகப்பெருமான் மீண்டும் கூர்மை யுள்ள ஐந்து கணைகளை எடுத்து அவனுடைய தேர், கொடி, குதிரை, தேர்ப்பாகன், வில் இவை களை முறித்தனர்.. அவனைச் சுற்றி நின்ற பல்வ

கைச் சேனைகளையும் பறக்க அடித்து, சிந்துவை நிராயுதபாணியாய் நிலத்தில் நிற்கச் செய்தனர். அப்போதாயினும் விக்கின விநாயகனை வழிபட்டிருந்தால் அருள்புரிந்து அபயம் அளித்திருப்பார். சிந்து முன்வினைப் பயனால் அருகே யிருந்த ஒரு வச்சிராயுதத்தைக் கையிலேந்தி எள்ன வார்த்தைகள் பேசி, கணநாதர் மீது வீசினன். அப்போது கணேசர் சிவபெருமானை மனத்தில் உன்னிச் சூலாயுதத்தை எடுத்து அவ்வரக்கன் மார்பின்மேல் குறி பார்த்து விடுத்தனர். சூலாயுதம் பாய்ந்ததும், அரக்கன் மடிந்து விழுந்தனன். அவனை அனுக்கிரகிக்கும் வண்ணம், உயிர் நீங்கும் தருணத்தில், கணேசமூர்த்தி கோடி சூரியப் பிரகாசத்துடன் அவனுக்குத் தமது விசுவரூப தரிசனம் தந்தனர். அப்போது தேவர்கள் பூமாரி பொழிந்தனர். முனிவர்களெல்லாம் வேதங்களைச் சொல்லி விநாயகமூர்த்தியைத் துதித்தார்கள்.

உடனே நமது விநாயகமூர்த்தி நந்திதேவரை அழைத்து மூவுலகிலும் சிறைப்பட்டுள்ள முனிவர்களையும் தேவர்களையும் சிறை நீக்கி, அவரவர் பதவியை அடையச் செய்யுமாறு ஆக்கியாபித்தனர். ஆணையை மேற்கொண்ட நந்தியெம்பெருமான் முதலில் பொன்னுலகம் சென்று, புரந்தரனை முன்போல் அமராவதியில் அரசு செலுத்தச் செய்தார். சிறை நீங்கிய

தேவர்கள் மகாகணபதியின் திருமுன்னர் வந்து வணங்கி விடை பெற்றுச் சென்றனர். பின்னர், கணநாதர் கைலையங்கிரி சென்று, கங்காதரரையும் அவர்பாலமர்ந்த ஞானநாயகியாரையும் பணிந்தனர். உடனே, அண்டமெல்லாம் பெற்று அளித்த அம்மையார் அணுகி வந்து பால விநாயகரை எடுத்துத் தம் மடிமீதில் வைத்துத் திருஷ்டி கழித்து முத்தமிட்டனர். அப்போது மூத்தபிள்ளையார், பெற்றோர் களிக்கப்போரில் தாம் அடைந்த வெற்றியைப் பற்றி விவரமாகச் சொல்லினர். சிவபெருமான் பிள்ளையின் வெற்றியைக் கேட்டுப் புகழ்ந்து, அவர்காலிற்கு வீரகண்டாமணி அணிவித்தார்; ஜயபேரிகை முழங்க, தேவர் முனிவர் முதலாயினோர் யாவரும் மங்கள வாழ்த்துக்கூற, 'தைரிய-வீர-கோரசூர சம்மார! சுரவரதா! சித்திவிநாயகா!' என்று புகழ்ந்து பரமேசுவரர் பல ஆசிகள் கூறினர். கைலாயத்தின்கண் தமது ஆலயத்தின் முகவாயிலில் விசுவகர்மனைக் கொண்டு தக்கதோர்மாளிகை அமைத்து, கணநாதர் அதிலிருக்குமாறு அருளினர். அம்மாளிகைக்கு, 'ஆனந்தபவனம்' என்று பெயர்.





கயமுகாசுரன்முன் தேவர்கள் தோப்புக்காணம் போடுதல்

## 9. கணபதிக்குத் தோப்புக்கரணம் போடுவதேன்?

முன் ஒருகாலத்தில் அசுரேந்திரன் என்பவன் தேவேந்திரனோடு யுத்தம்செய்து தோற்றான். அவ் வசுரன் அதனால் வெட்கமடைந்து அவ்விந்திரனை எவ்விதத்திலாயினும் வெல்லவேண்டுமென்று தனது குலகுருவாகிய சுக்கிராசாரியரை வரவழைத்து ஆலோசனை செய்தான். அப்போது சுக்கிராசாரியர் யோசனை செய்து, அசுரேந்திரனை நோக்கி, 'விபுதை என்னும் ஓர் அழகிய அசுர கன்னிகையைத் தவத்திற் சிறந்த மாகத முனிவரிடம் அனுப்பி, அவரை அம்மாது மயக்கி மணக்கச் செய்து ஒரு பிள்ளையைப் பெறும்படி செய்யவேண்டும். அரக்கர்களுக்கு இப்போது ஏற்பட்டுள்ள தலைகுனிவு அவனால் தொலையும். ஆதலால், நீ உடனே அதற்கு வேண்டியதைச் செய்' என்று சொன்னார். அதன்படி செய்ய அசுரேந்திரனும் விபுதைக்கு உத்தரவிட்டனன்.

விபுதை அசுரேந்திரன் கட்டளைப்படி அம் முனிவருடைய ஆச்சிரமம் அடைந்தாள். தனது சாகசத்தினால் அவர் தன்னை மணக்கும்படி செய்து, ஒரு நாள் இருவரும் யானை உருக்கொண்டு சந்தோஷித்திருந்தனர். அப்போது யானை முகத்தோடு கயமுகாசுரன் பிறந்தான்.

அவன் சிவபெருமானைக் குறித்து அரிய தவங்களைச் செய்து, இறவா வரம் பெற்றான். கயமுகன் மூவுலகினும் தன் ஆணை செல்லும்படி மதங்கபுரி என்னும் நகரத்தில் தேவர்கள் குற்றேவல் செய்ய அரசு செலுத்தி வந்தான். தேவர்கள் தன்னிடத்திற்கு வரும்போதெல்லாம், மூன்றுமுறை தங்கள் தலையிற் குட்டிக்கொள்ள வேண்டுமென்றும் இரண்டு காதுகளையும் இரண்டு கைகளால் மாறிப் பிடித்துக் கொண்டு, உட்காந்து உட்காந்து எழுந்து தோப்புக்கரணம் போடவேண்டும் என்றும் கட்டளை யிட்டான். அவர்களும் அவனுடைய கொடுங்கோலுக்குப் பயந்து அவனிட்ட கட்டளையின்படியே செய்து வந்தார்கள்.

இப்படி யெல்லாம் இம்சிக்கப்பட்டு வரும் தேவர்கள் ஒருநாள் ஒருங்குகூடிச் சிவபெருமானிடம் சென்று, கயமுகாசுரனால் தங்களுக்கு நேரிட்டிருக்கும் துன்பங்களைச் சொல்லி முறையிட்டனர். அதைக்கேட்ட மகாதேவர், 'தேவர்காள், அஞ்சாதீர்கள்; நமது பாலசந்திரமூர்த்தியைக் கொண்டு கயமுகாசுரனைத் தண்டிப்போம்' என்று சொல்லி அனுப்பினர்.

உடனே சிவபெருமான் நந்திதேவரை ஆனந்தபவனத்திற்கு அனுப்பிப் பிள்ளையாரை வரவழைத்தனர். பிள்ளையார் அந்தப்படியே கைலாயம்வந்து, மாதா பிதாக்களாகிய பார்வதி,

பரமேசுவரன் ஆகிய இருவரையும் வணங்கி நின்றனர். அப்போது சிவபெருமான் அவரை எடுத்து மடிமீதிருத்தி, 'குழந்தாய்! நீ எல்லா கணங்களுக்கும் தலைமை பெற்றிரு, யாவரும் உன்னைக் கணபதி என்று துதிக்கட்டும்; தேவர், முனிவர், மனிதர் முதலாயினோரும் எவ்வகைப் பட்ட கருமங்களைச் செய்யினும் முதலில் உன்னைப் பூசித்தே அக் காரியங்களைத் தொடங்கக் கடவர்' என்று ஆசி கூறினர். பின்னும் பால கணபதியைப் பார்த்து, 'பிள்ளாய், நீ சென்று, தேவர்களுக்குத் துன்பம் செய்துவரும் கயமுகாசுரனைத் தண்டித்துத் தேவர்களைச் சுகமடையச் செய்' என்று ஆக்கியாபித்தனர்.

சிவபெருமான் ஆணையின்படி விநாயகக் கடவுள் போர்க்கோலங்கொண்டு அசலன் என்னும் ஒரு பூதவீரனது தோளின்மீது ஏறிக் கொண்டு, அநேக பூதகணங்கள் புடைசூழப் புறப்பட்டார். கயமுகாசுரன் இதைக் கேள்வியுற்றுப் பல்லாயிரம் அசுரர்களைச் சேர்த்துக் கொண்டு, கதாயுதமொன்றைக் கையிலேந்திப் போர்செய்ய வந்தான். அசுரனுடைய சேனைகளெல்லாம் வேழமுகப் பெருமானது அஸ்திரங்களால் அலைக்கப்பட்டன; மடிந்தவர் போக மிகுந்தவர் ஓடி யொளித்தனர். கயமுகாசுரன் அது கண்டு கடுஞ் சினங்கொண்டு கடும் போர் புரிந்தனன். கணபதி இவ் வசுரன் பெற்

றிருக்கும் சாகாவரத்தை யோசித்துத் தமது இரு தந்தங்களில் வலத் தந்தத்தை ஒடித்து அவன்மீது எறிந்தனர். அஃது அவனுடைய மார்பைப் பிளக்க, அவன் பூமியிற் சாய்ந்து, ஒரு பெருச்சாளி உருவங்கொண்டு கணநாதர் எதிரில் நின்று பின்னும்போர்செய்யத்தொடங் கினன். அதைக்கண்ட பிள்ளையார் அவன்மீது கருணைகூர்ந்து அந்தமூஷிகத்தை அசைவறப் பிடித்து ஏறித் தமக்கு வாகனமாக்கிக் கொண் டனர். பிறகு, தேவர்களைக் காத்தற்பொருட்டுக் கபமுகாசுரன் மார்பைப் பிளந்த தமது தந் தத்தைத் தம் கரத்தில் ஓர் ஆயுதமாக ஏந்திக் கொண்டனர். அதனால் அவருக்கு ஏகதந்தர் என்று பெயராயிற்று.

தேவர்கள் கபமுகாசுரனுக்குச் செலுத்தி வந்த வந்தனமாகிய குட்டிக்கொள்ளுதலும், தோப்புக்கரணம் போடுதலுமாகிய இவ்விரண் டினையும் கணநாதரின் சந்நிதியில் அன்று முதல்மகிழ்வுடன் செய்வதாகக்கூறினர். அதை ஐய கணபதி அங்கிகரித்தனர். அதனால்தான் நாம் எல்லோரும் கணேசராலயத்திற்குச் சென் றதும்,குட்டிக்கொண்டுதோப்புக்கரணம் போட் டுத் தொழுது எழுகின்றோம்.



## 10. கணபதிக்கு அறுகம்புல் சாத்துவதேன்?

உலகத்தில் நல்ல மணமுள்ள மல்லிகை, முல்லை, இருவாட்சி, சண்பகம், புன்னை, பாரிசாதம் முதலிய திவ்வியமான மலர்கள் இருக்க, அவைகளை விட்டு யாதொரு மணமும் இல்லாத அறுகம்புல்லை நமது கணநாதருக்கு சாத்துவது எதற்கு? முன் ஒரு காலத்தில் எமதர்ம ராஜனுக்கு அக்கினி சொரூபமான அனலாசுரன் என்ற ஒரு பிள்ளை பிறந்தான். அவன் அகோர சொரூபமுடைய அரக்கனுய் வளர்ந்து மண்ணுலகில் உள்ளோர்களைப் புசித்து விண்ணுலகத்தையும் அழிக்க நெருங்கினுன். அவனைக் கண்ட தேவேந்திரன் அநவரத விநாயகரைத் தியானித்துப் பலமுறை துதித்தனன். அப்போது விநாயகக் கடவுள் அங்குத் தோன்றி அவ்வனலாசுரனை அக்கினி கோளமாக்கித் தமது கரத்தில் அடங்கும்படி செய்து அவ்வனலை விழுங்கித் தம் வயிற்றில் அடக்கினர்.

அந்த அனல் அவர் வயிற்றில் இருந்த சகல அண்டங்களிலும் தாக்கி அல்லற்படுத்திற்று. அதைக் கண்ட திருமால், சந்திரன், வருணன் முதலிய தேவர்கள் தாமரை மலர்களை ஒற்றியும், குளிர்ந்த அமிர்தங் கொண்டு அபி

ஷேகித்தும், இன்னும் பலவித உபசாரங்களைச் செய்தும், அவ் வண்டங்களில் உள்ளவர்களின் வெப்பம் நீங்காதது கண்டு, மனம் வருந்தினர். அப்போது முனிவர்களெல்லாரும்கூடிக் கங்காதரனைப் பணிந்து, அவரவர்கள் தனித்தனியாக இருபத்தோர் அறுகுகளைச் சிரசுமுதல் பாதமளவும் சாத்தினார்கள். அதனால் அவ் வனல் குளிர்ந்தது. எல்லா உலகங்களும் வெப்பம் நீங்கி மகிழ்ச்சி அடைந்தன. அறுகு சாத்தியதும் அனல் நீங்கிச் சந்திரனைப்போலக் குளிர்ந்ததனால், முனிவர்கள், அப் பெருமானை, 'பாலசந்திர மூர்த்தி' என்று சொல்லித் துதித்தனர். ஆதலால், நமது பாலசந்திர மூர்த்திக்கு எல்லா மலர்களிலும் பச்சை நிறம் வாய்ந்த அறுகம் புல்லே அதிக பிரியமானதாயிற்று. அதையே பக்தர்கள் இன்றும் சிரேஷ்டமாகக் கொண்டு அர்ச்சித்து அவர் அருள் பெறுகின்றார்கள்.



## 11. கணபதிக்குத் தேங்காய் சூறையடிப்பதேன்?

காசிபர் பத்தினியாகிய அதிதி, தனது புத்திரர்களாகிய தேவர்களை அசுரர் பிடித்து அளவற்ற துன்பங்கள் செய்துவந்ததைக் கண்டு சகியாதவளாய்க் காசிபரிடம் தெரிவித்தனள். காசிபர் அருளியபடி அதிதி விநாயக மூர்த்தியைக் குறித்துத் தவம் செய்தனள். விநாயகர் ஒரு குழந்தை உருக்கொண்டு அவ்வம்மையின் எதிரில் தோன்றினர். காசிபர் அக்குழந்தையை மகிழ்வுடன் எடுத்து, அவருக்கு மகோற்கடர் என்று திருநாமமிட்டு வளர்த்தனர். ஆறுவயது அடைந்ததும், அவர் சகல சாஸ்திரங்களும் கற்றுணர்ந்தார். அசுரரால் தமக்கு நேர்ந்த பல துன்பங்களையும் தமது பாலலீலைகளினாலேயே மகோற்கடர் எளிதாக நீக்கிக் கொண்டு உலகமெங்கும் தமது புகழ் பரவுமாறு காசிபர் ஆச்சிரமத்தில் இருந்தனர்.

அப்போது காசிராஜன் தனது புரோகிதராகிய காசிபரையடைந்து, தனது இளவரசாகிய மூத்தகுமாரனுக்கு விவாகச் சடங்குகளைச் செய்விக்கப் பணிந்து கேட்டனன். அதற்குக் காசிபர், தாம் அப்போது அனுஷ்டித்துவரும் விரதம் முடியவில்லை என்றும், தமது புத்திரர் மகோற்கடர் இச் சுபமுகூர்த்தத்தைச் சிறப்பு

டன் நடத்தவல்லவர் என்றும், அவரைத் தமக்குப் பதிலாக வைத்துச் சகல காரியங்களையும் மங்களமாய் முடிக்கலாம் என்றும் விடைபகர்ந்தனர். அரசன் அதற்கிசைந்து காசிபரின் பத்தினி அதிதியிடம் சென்று பணிந்து, அங்கிருந்த மகோற்கடரையும் கண்டு களித்துக் காசிபரின் கட்டளையைத் தெரிவித்தனன். அதிதி காசிராஜனுக்கு ஆசிகூறி, அவனுடன் தமது அருமைப் புதல்வரைப் போய்வரும்படி சொல்லினர். அதன்படியே மகோற்கடரும் காசிராஜனும் காசிபரிடமும் அதிதியிடமும் விடை பெற்றுக் காசிநகரை அடைந்தனர். அந் நகரவாசிகள் அரசன் மகோற்கடருடன் வருவதைக் கேட்டு ஆனந்தங் கொண்டு நகர முழுவதும் அலங்கரித்து வரவேற்றனர். அப்போது அசுரர்களின் தலைவனான நராந்தகன், கூடன் என்னும் அசுரனை, மகோற்கடர் அரசசபை அணுகாதபடி தடுக்க ஏவினன். அப்படியே கூடன் காசியம்பதி சென்று, அதன் அரண்மனை வாயிலைப் பாறை யுருக்கொண்டு மறைத்துத் தடுத்தனன்.

இதனை யறிந்த மகோற்கடராகிய விநாயகமூர்த்தி, காசிராஜனைக்கொண்டு ஆயிரம் தேங்காய்கள் கொண்டுவரச்செய்தனர். அவைகளில் அவர் அஸ்திர ஆவாகனஞ்செய்து, சகல விக்கினங்களையும்போக்கவல்லவிநாயகப்பிரீதியாக

அந்தப் பாறை யுருக்கொண்ட அசுரன்மீது உடைக்கக் கட்டளையிட்டனர். அக் கட்டளையின் படி ஏவலாளர் தேங்காய்களைப் பாறையின்மீது உடைத்தனர். பாறை யுருக்கொண்ட கூடன் உடல் பிளக்கப்பட்டு, அநேக யோசனை பருமனும் நீளமுமுள்ள சுவயரூபத்துடன் விழுந்து இறந்தனன். அப்போது மகோற்கடர் பூமியை உற்று நோக்க, பூமியானது பிளவுபட்டு அச் சரீரத்தைத் தன்னுள் அடக்கிக்கொண்டது. அப்போது தேவர்களும் முனிவர்களும், மகோற்கடராய் அவதரித்துள்ள விநாயக மூர்த்தியின் முன்தோன்றி, 'விக்கினவிநாயகா, இன்றுமுதல் யாவர் உமது தேவாலயத்தின்முன் பாறையின் மேல்தேங்காய்களைச் சூறையடிக்கின்றார்களோ, அவர்களது இஷ்டசித்திகளை நிறைவேற்றும்படி பிரார்த்திக்கின்றோம்' என்று வேண்டிக் கொண்டனர். அதற்குக் கருணாமூர்த்தி, 'அப்படியே ஆகுக' என்று அநுக்கிரகித்தனர். அன்று முதல் தேங்காய்களைச் சூறை யடிக்கப் பிரார்த்தனை செய்துகொண்டு, தங்கள் காரியங்கள் சித்தி யடைந்ததும், பிரார்த்தனையின் படியே கணேசருக்குத் தேங்காய்களைச் சுற்றிச் சுழற்றிப் பாறையின்மேல் மோதி உடைத்தல் வழக்கமாயிற்று.





பிரமதேவர் கணபதியின் அருள்பெறுதல்

## 12. பிரமதேவர் கணபதியின் அருள்பெற்றது

பிரமதேவர் ஒரு கற்ப ஆரம்பத்தில் உலகங்களைச் சிருஷ்டி செய்வதற்காக ஆரம்பித்துச் செய்துவரும்போது, மனிதர்களைப் படைக்குந் தருணத்தில் அவர் நினைத்தபடி ரூபங்கள் அமையாமல், ஒரு தலையும், இரண்டு முகங்களும், மூன்று கண்களும், நான்கு கைகளும், ஐந்து கால்களுமாக அமைந்த உருவங்களைக் கண்டு பயந்தனர். கண்டவர் நடுங்கும்படியான அளவற்ற விகார ரூபங்கள் ஏன் உண்டாயின என்று யோசித்தனர். அத்தருணம் அவ்வுருவங்களிற் சில அவரைக் கண்டு சிரிப்பதும், சில அடிக்க வருவதும், சில கண்களை உருட்டிப் பார்ப்பதுமாகப் பல துன்பங்களைச் செய்ய ஆரம்பித்தன. அப்போது பிரமதேவர், தாம் சகல விக்கினங்களையும் நீக்கவல்ல விநாயகக் கடவுளைப் பூசிக்காது சிருஷ்டித் தொழில் ஆரம்பித்ததின் பயன் இதுவென்று உணர்ந்தார்.

உடனே, சமுத்திரத்தின் மத்தியில் பதுமாசனத்தின்மீ திருந்து, கிருபா மூர்த்தியாகிய மகாகணபதியைத் தியானித்துத் தாம் செய்த பிழையைப் பொறுத்தருளும்படி அநேக வேத வாக்கியங்களினால் துதித்தனர். அப்போது அன்பர்க்கு எளியவராகிய அநவரத

விநாயகர் அச் சமுத்திரத்தில் ஓர் ஆலிலையில் குழந்தை யுருவுடன் தோன்றி மிதந்து பிரம தேவரை அணுகி வந்தனர். பிரமதேவர் அக் குழந்தையை உற்று நோக்கியதும், அது யானை முகத்துடன் விநாயக சொரூபமாகித் தரிசனம் கொடுத்தது. உடனே பிரமதேவர் கணபதி யைப்பணிந்து, 'தேவரீரைப்பூசியாது சிருஷ்டி செய்ப ஆரம்பித்ததில் அநேக துன்பங்கள் உண்டாயின. அப்பிழையைப் பொறுத்து, யான் நினைத்தபடி சிருஷ்டி செய்யுமாறு அனுக்கிர கிக்க வேண்டும்' என்று பிரார்த்தித்தனர். அதற்குப் பிள்ளையார், 'இனி இடையூறின்றி சிருஷ்டி செய்வதற்கு நமது ஏகாட்சர (பிரணவ) மந்திரத்தை ஜெபித்து, பின்னர்ச் சிருஷ்டி செய்ய முயல்வீர்' என்று சொல்லி மறைந் தனர். உடனே பிரமன் அவர் தோன்றிய திக்கு நோக்கி வணங்கி ஆனந்தத்தோடும் மந் திரத்தை முறைப்படி ஜெபித்தனர். அதனால் சிருஷ்டித் தொழில் யாதொரு விக்கினமுமின்றி நினைத்தபடி ஏற்படுவதாயிற்று.

## 13. கணபதி சித்திபுத்திகளை மணந்தது

பிரமதேவர் விநாயகக் கடவுளின் அருள் பெற்றுச் சிருஷ்டித் தொழிலை ஆரம்பித்த போது, முதலில் கணநாதரின் சக்திகளாகிய சித்தி புத்திகள் இரண்டு அழகிய பெண்களாக அவருடைய தியானத்தினின்றும் தோன்றினர். அவர்களைக் கண்டதும், 'எனது அருமைப் புத்திரிகளாகிய இவ் விருவர்களையும் கிருபா மூர்த்தியாகிய மகா கணபதிக்கே அர்ப்பணம் செய்து, திருமணம் செய்துகொள்ள வேண்டிக் கொள்வேன்' என்று சங்கற்பித்தனர். அதன் பின்னர், கிரமமாகச் சப்தரிஷிகள், சனகர், சனந்தனர், சனாதனர், சனத்குமாரர் என்கிற நால்வரோடு நாரதரையும் சிருஷ்டித்துப் பின்னும் இதர ஜீவராசிகளையும் படைத்தார்.

அப்பால் அவர் நாரதரை அனுப்பித் தம் எண்ணத்தைச் சர்வபரிபூரண கருணாமூர்த்தியாகிய கணபதிக்குத் தெரிவிக்கும்படி அனுப்பினர். நாரதர் ஆனந்தபவனம் சென்று பால சந்திர மூர்த்தியைக் கண்டு, தமது பிதாவின் அபிப்பிராயத்தை விண்ணப்பம் செய்தனர். அதற்கு விநாயகக் கடவுள் இசைந்து, 'நாரத முனிவரே, உமது பிதா பிரமதேவர் விரும்பியபடி யாம் அம் மங்கையர் இருவரையும் அங்கீ

கரிக்கின்றோம். கலியாணத்திற்கு வேண்டிய முயற்சிகளைச் செய்யுங்கள்' என்று அருள்புரிந்தனர். உடனே அதி சந்தோஷத்துடன் நாரதர் விடை பெற்றுக்கொண்டு, சத்திய லோகம் சென்று விநாயகக் கடவுள் அன்புடன் அங்கீகரித்ததைத் தெரிவித்தனர்.

உடனே பிரமதேவர் ஆனந்தத்தோடு கைலாயத்தை அடைந்தனர். பார்வதியையும் பரமேசுவரனையும் தரிசித்து, தமது விருப்பத்தையும் விநாயக மூர்த்தியின் சம்மதத்தையும் தெரிவித்தனர். அவர்கள் சம்மதத்தையும் மகிழ்வுடன் பெற்றனர். பின்னர், கலியாணத்திற்கு வேண்டியன செய்ய, திரும்பிச் சத்தியலோகம் வந்தடைந்தனர். வந்தவுடன், தேவதச்சனாகிய விசுவகர்மாவை அழைத்துக் கலியாண மண்டபம் அற்புதமாக அமைக்கச் செய்தனர். திருமால் முதலிய தேவர்களையும், சனகர் முதலிய முனிவர்களையும் வரவழைத்தனர்.

சுபமுகூர்த்தத்தில், நமது பாலசந்திரமூர்த்தியைச் சர்வாபரணங்களும் அணியச் செய்து, சர்வாலங்காரத்துடன் மணக்கோலம் செய்து, சிவபெருமான் உமாதேவியார் ஸ்கந்த மூர்த்தி நந்திதேவர் முதலியவர்களும், இன்னும் பல கணங்களும் சூழ், நாரதமுனிவர் சத்தியலோகத்திற்கு அழைத்து வந்தார்.

சனகமகாமுனிவர் விவாக மண்டபத்தில் மந்திரபூர்வகமாக ஓமகுண்டம் அமைத்து, விநாயகக் கடவுளையும் சித்திபுத்திகளையும் அதனருகில் எழுந்தருளச் செய்து, மற்ற முனிவர்களைக் கொண்டு ஓமம் வளர்ப்பித்து விநாயகமூர்த்தியையும் சித்திபுத்திகளையும் ஓமாக்கினியைச் சுற்றி வரச்செய்தனர். அப்போது, பிரமதேவர் தமது புத்திரிகளாகிய சித்திபுத்திகளின் திருக்கரங்களைச் சேர்த்துக் கணபதியின் கரத்தில் வைத்து, சரசுவதிதேவியார் தண்ணீர் வார்க்க, தத்தம் செய்தனர். அப்போது சர்வமங்கள வாத்தியங்களும் முழங்க, எல்லாரும் வாழ்த்துக் கூறினர்.

இவ்வாறு திருக்கலியாணம் சகல சம்பிரமத்துடன் நடந்தேறியது. சிவபெருமான் மூத்த பிள்ளையைச் சித்திபுத்திகளுடன் அழைத்துக் கொண்டுபோய் ஆனந்தபவனத்தில் விடுத்து, அண்டினோர்க்குச் சகல வரங்களும் அருளச் செய்வித்தனர். பின்னர், உமாதேவியாருடனும் பாலசுப்பிரமணியருடனும் சிவபெருமான் கைலாயமடைந்து தமது ஆலயத்திருந்தனர். கிருபாமூர்த்தியாகிய மூத்தபிள்ளையார் சித்திபுத்திகளுடன் மலரும் மணமும்போலச் சுகித்திருந்து, அன்பர்களுக்கு வேண்டுவனவற்றை வேண்டியபடியே கொடுத்து, ஆனந்த சொரூபராய் விளங்கி யருளினர்.





கணபதி

## 14. கணபதியின் உருவ அமைப்பு

கணபதியின் வடிவமானது இந்துக்களின் ஒரு பெரிய கருத்தினை உருவகப்படுத்திக் காட்டுவதற்காக ஏற்பட்ட ஒரு குறியாகும்.

யானைமுகம் — நினைத்த காரியத்தை நிறைவேற்றுவதற்குக் கையில்லையானால், தலையிருந்தும் பிரயோசனமில்லை. அதுபோலவே, நினைப்பதற்குத் தலையில்லையானால் கைமாத்திரமிருந்தும் என்ன பயன்? மனத்தில் நினைக்கும் சக்தியும், கையினால் நிறைவேற்றும் சக்தியும் ஒருமித்து இருப்பது யானைத் தலையில்தான். அதனாலேதான் இக்கடவுளுக்கு மானிடவுடலின்மீது யானைத்தலை பொருந்தி யிருக்கிறது.

பெருவயிறு — இக் கடவுளுக்கு லம்போதரன் என்று பெயர். அதாவது, எதனையும் ஜீர்ணிக்கத் தக்க வயிறுடையவன் என்பதாகிறது. ஒருவன் நினைத்த காரியத்தை நிறைவேற்றி, விரும்பிப் பெற்றதை உண்டு, அதைத் தக்கபடி ஜீர்ணித்துக்கொண்டா லல்லாமல் குணம் அடையமாட்டான். சகல அண்டங்களையும் தம் அகட்டில் வைத்து, காத்து, ஜீர்ணிக்கும் சர்வதயாபர மூர்த்தியாகிய இவருக்குப் பெருவயிறு காண்பிக்கப்பட் டிருக்கிறது.

ஐந்து கரங்கள் — கணபதிக்கு நான்கு கரங்களுடன் தும்பிக்கையும் சேர்ந்து ஐந்து

கரங்களாகும். அதனுல், இவரை ஐங்கரன் என்பர். தும்பிக்கையாகிய கையின் விசேஷம் யானைமுகம் என்னும் தலைப்பின்கீழ்த் தெரிவிக்கப்பட்டிருக்கிறது. மற்றுமுள்ள நான்கு கரங்கள், உலகத்தின் நான்கு திக்குகளைக் குறிக்கும். இதனுல் பிள்ளையார் உலகமுழுதும் நிறைந்து நிற்பவர் என்று காட்டப்பட்டது.

இதுவன்றி, தமக்காக மோதகம் ஏந்த ஒரு கரமும், தேவர்களை இரட்சிப்பதற்காக ஒடித்த ஒற்றைக் கொம்பை ஏந்த ஒருகாமும், தந்தை தாயர்களாம் சிவபெருமானையும் உமாதேவியையும் அபிஷேகிக்க வேண்டித் தங்கக் கலசம் ஏந்த ஒரு கரமும், தம்மை வழிபடுவோரின் வல்வினை நீக்க அங்குசபாசங்களை ஏந்த மற்ற இருகரங்களும் ஆக ஐங்கரங்களுடன் கணநாதர் விளங்குகிருர்.

பதுமாசனம் — கணபதி வீற்றிருக்கும் பதுமாசனம், 'நீ கருதிய காரியத்தை யாம் எப்படியாவது முடித்து வைப்போம்' என்று நிச்சயித்து இருப்பதைத் தெரிவிக்கின்றது.

பணிப்பெண்கள் — கணபதிக்குப் பணிப்பெண்கள் எண்மர். அவர்களை அஷ்டமாசித்திகள் என்று சொல்லுவர். எடுத்த காரியங்களை விக்கினமின்றி இந்தச் சக்திகளைக் கொண்டே முடித்து வைக்கின்ருர் என்கிற உண்மையை,

இந்தப் பணிப் பெண்களின் உருவங்கள் குறிப்பிக்கின்றன. இதனாலேயே இவர்க்குச் சித்திக் கடவுள் என்னும் ஒரு பெயரும் உண்டு.

மூஷிகவாகனம் — நமது வீடுகளில் எலி நுழையாத இடமும் உண்டோ? நாம் எவ்வளவு ஜாக்கிரதையாக இருப்பினும், அது இங்கும் அங்கும் ஓடித் துணிவுடன் திரிகின்றது. எலி தான் விரும்பிய வஸ்து எவ்விடமிருப்பினும், அதை எவ்வாறாகிலும் அடைந்து புசித்து ஜீர்ணித்துக்கொள்ளும். ஆதலால், இக்கடவுள் தம்மை நாடியவர்கள் காரியம் எப்படிப்பட்டதாயினும் அதனை முடித்து வைக்க வல்லவராகையினால், அத்தகைய குணம் வாய்ந்த மூஷிகம் இவருக்கு வாகனமாக அமைக்கப்பட்டது.

இந்துக்களுள் சகல மதத்தினரும் இந்தத் தேவதையைப் பலவேறு பெயர்களைக் கொண்டு அவர்கள் செய்யும் சுபாசுப காரியங்கள் ஒவ்வொன்றிலும், முன்னால் பூசை செய்து முடித்தே, இதர தெய்வங்களை வணங்குகின்றனர். ஆதலால், கணேச பூசையானது இமாலய முதல் கன்னியாகுமரி வரையில், அநேகமாய் எல்லாராலும் செய்யப்பட்டு வருகின்றது. அவர் அனுக்கிரகத்தைப் பெற்று இத்தேயத்தார் சிறப்புடன் வாழ்கின்றனர்.





# ஜய கீதம்

சிந்தித் தவர்க்கருள் கணபதி சயசய !
சீரிய ஆனைக் கன்றே சயசய !

அன்புடை யமரர்கட் காப்பாய் சயசய
ஆவித் துணையே கணபதி சயசய
இண்டைச் சடைமுடி இறைவா சயசய
ஈசன் தந்தருள் மகனே சயசய
உன்னிய கருமம் முடிப்பாய் சயசய
[1]ஊர்நவ சந்தி யுகந்தாய் சயசய
எம்பெரு மானே யிறைவா சயசய
ஏழுல குந்தொழ நின்றாய் சயசய
ஐயா கணபதி நம்பியே சயசய
ஒற்றை மருப்புடை வித்தகா சயசய
ஓங்கிய ஆனைக் கன்றே சயசய
ஔவிய மில்லா அருளே சயசய
[2]அஃகறு வத்து வானவா சயசய

---

1. ஊர் நவசந்தி - ஊரினது புதிய வழிகள் கூடுமிடம் ; 2. அஃகு அறு அத்து ஆனவா - குறைத லில்லாத செந்நிற மானவனே.

கணபதி யென்வினை களைவாய் சயசய
[1]ஙப்போர் மழுவொன் றேந்தியே சயசய
சங்கரன் மகனே சதுரா சயசய
[2]ஞயனம் பினர்பா லாடிய சயசய
இடம்படு விக்கின விநாயக சயசய
இணங்கிய பிள்ளைகள் தலைவா சயசய
தத்துவ மறைநெறி வித்தகா சயசய
நன்னெறி விக்கின விநாயகா சயசய
பள்ளியி லுறைதரும் பிள்ளாய் சயசய
மன்று ளாடும் மணியே சயசய
இயங்கிய ஞானக் குன்றே சயசய
அரவக் கிண்கிணி யார்ப்பாய் சயசய
இலகக் கொம்பன் றேந்தியே சயசய
வஞ்சனை பலவுந் தீர்ப்பாய் சயசய
அழகிய ஆனைக் கன்றே சயசய
இளமத யானை முகத்தாய் சயசய
[3]இறகுபதி விக்கின விநாயகா சயசய
[4]அனந்தலோ டாதிய லடிதொழ வருளே.



1. ஙப்போர் - இனவெழுத்தைத் தழுவும் ஙகரத்தைப் போல் முன்னணியையும், பின்னணியையும் தழுவிப் போர் செய்ய வல்ல மழு என்பது ; 2. ஞயம் - அருள் ; 3. இரகுபதி என்பது இறகுபதி என்றாயிற்று. இரகுபதி - ஸ்ரீராமபிரான் ; 4. அனந்தல் ஒடாது-செருக்கை அதிகரிக்காமல், இயல்-அழகு.

